# விரஸத்தில் ரஸம்

**வ.ரா.**

சீதாராமனும் ராதாகிருஷ்ணனும் நீண்ட காலத்துத் தோழர்கள். புராணங்களில் ராதாகிருஷ்ணன், சீதாராமனுக்கு அடுத்த அவதாரம். ஆனால், நடப்பிலே இவர்கள் இருவரும் இணை பிரியாத நண்பர்கள். இரண்டு பேரும் ஒரே ஊர். இரண்டு பேரும் எதிர் வீட்டுக்காரர்கள்.

குழந்தை முதலே, இவர்கள் இருவரையும் ஜோடியாகத்தான் காண முடியும். இருவருக்கு மிடையே, அவ்வளவு வாஞ்சை என்று ஊரார் சொல்லுவார்கள். வாஞ்சைக்கு உயர்ந்த வார்த்தை கிராமத்தாருக்குத் தெரியாது. நாட்டுக்கு அஸ்திவாரமாயிருக்கிற கிராமத்துக்கே ஒன்று தெரியாமல் போனால், அதைப்பற்றிப்பேச, மற்ற யாருக்கும் பாத்தியம் இருக்குமா?

இந்த இணை பிரியாத நட்பிலே ஒரே ஒரு ஸ்வாரஸ்யம். ஒருவன் சொல்லுவதை மற்றவன் ஏற்றுக் கொள்ளுவதேயில்லை. ''அதோ போகிற மாடு கறுப்பு!'' என்பான் ஒருவன்.

''நீ சொல்லுகிறது சுத்தத் தப்பு. அது கறுப்பும் வெளுப்பும் கலந்தது!'' என்பான் மற்றவன்.

''நீ வெளுப்புக் கொம்பைப் பார்த்து விட்டுச் சொல்லுகிறாய். உடம்புத் தோல் கறுப்பு!'' என்பான் ஒருவன்.

''சொத்தைக் கொம்பு, வெளுப்புக் கொம்பு மாதிரி உன் கண்ணில் படுகிறது'' என்று மற்றவன் முடிப்பான்.

### ஸ்வாரஸ்யம் என்ன?

இந்த விபரீத வினோதத்தை ஊரார் வெகு காலம் கண்டு கொள்ள முடியவேயில்லை. நண்பர்களுடைய வாக்கு வாதம் கைக்குத்து வரை வந்துவிடும். தெரியாத்தனமாய் யாரேனும் விலக்கப் போய்விட்டால், இரண்டு பேரும் சேர்ந்து, அவன் பேரில் பாய்ந்து, ''நாங்கள் இரண்டு பேரும் முட்டாள்கள் என்று உன் எண்ணமோ?'' என்று ஏக காலத்தில் படபடவென்று பேசித் தீர்த்து விடுவார்கள்.

ஆனால் விடியற் காலத்தில் கோழி கூவினதும் ராதா, சீதா என்று கூப்பிட்டுக் கொண்டே எழுந்திருப்பார்கள். ''பையன்களா! ஏன் இப்படி நாய்ச் சண்டை போட்டுக் கொள்ளுகிறீர்கள்?'' என்று கிழவர் ஒருவர் கேட்டு விட்டார். ''அது உங்கள் காலத்து வழக்கம்!'' என்பான் ராதா.

''இல்லை, இல்லை அது அவர்கள் வழக்கம்!'' என்பான் சீதா. கிழவருக்குக் கேட்டது போதும் என்று ஆய்விடும்.

**ரஸிகர்**

கிழவரோ, எழுபது கோடை பார்த்து அனுபவித்தவர். வயது சுமார் எண்பதிருக்கும். இந்தப் பையன்களுடைய மன்பான்மை, அவருடைய அனுபவப் புஸ்தக ஏட்டில் அகப்பட்ட தாகவே யில்லை. மேலே விழுந்து பிடுங்கிக் குதறுவது தான் பாக்கி. இவன் சொல்லுகிறதை, அவன் ஒப்புக் கொள்ளுவதில்லை. பிறத்தியான் மாட்டிக் கொண்டால், நசுக்கிவிடுவார்கள்!'' என்று கிழவர், பல தடவைகளில் சிந்தனை செய்து பார்த்தார்.

பயன் எப்படியிருக்கும்? அடித்துக் கொள்ளுகிற இருவர் ஒட்டிக் கொள்ளும் சூட்சுமம் கிழவருடைய கற்பனைக்கு அகப் படாதது இயற்கைதானே! கடவுள் உலகத்தில் எல்லாம் நேரும் என்று மொட்டைச் சமாதானம் செய்து கொள்ளுவது எல்லாருக்கும் எளிது. என்றாலும் காரணத்தைக் கண்டு பிடித்துவிட்டால், கடவுளைக் கண்டு கொண்டது போலத்தான்.

'வயதாகியும் முட்டாள்' என்று செல்லுகிறார்களே, அந்த இனத்தைச் சேர்ந்தவரல்ல கிழவர். இந்தப் பையன்கள் விசித் திரமாய் ஒட்டிக் கொண்டிருக்கிற மர்மத்தை எப்படியாவது அறிந்து விட வேண்டும் என்பது அவருடைய ஆவல். ''இரண்டு பேரும் ஆண்தானா? அல்லது ஒருவன் ஆண், மற்றொருவன் பெண்ணா?'' என்று சந்தேகம் கொள்ளும் வரையில் அவர் வந்து விட்டார்.

**படிப்பில் துடி**

இந்தப் பையன்கள் இருவரும் படிப்பிலும் ரொம்பத் துடி. ஒருவனுக்கொருவன் சளைத்தவன் அல்ல. பள்ளிவாத்திமார்களும் இவர்களுடைய பரஸ்பர சேஷ்டைகளையும் ஒற்றுமையையும் பார்த்து, ஆச்சரியமடைவார்கள். சீதா மடையன் என்றால் ராதாவுக்கு சந்தோஷம். ராதா முட்டாள் என்றால், சீதாவுக்கு சந்தோஷம். ஆனால் பள்ளிக்கு இருவரும் சேர்ந்துதான் வருவார்கள்; பள்ளியி லிருந்து சேர்ந்துதான் போவார்கள்.

பழைய கிழவர் இவர்களை விட்டபாடில்லை. ஒரு பொ ளைப் பற்றி ஒருவன் சதா நினைத்துக் கொண்டிருந்தால், அந்த பொருளின் தன்மை, ஒரு சிறிதேனும் அவனுக்கு வந்துவிடும் என் பெரியவர்கள் சொல்லுவார்கள். இந்தப் பையன்களைப் பற் எப்பொழுதும் நினைத்துக் கொண்டிருந்த கிழவருக்கும், அவர்களி சேஷ்டை மனப்பான்மையில் சிறிது அளவு கொஞ்ச காலத்தி வந்தது.

## விசாரணை எதற்கு?

ஒருநாள் சாயங்காலம், கிழவர் ஆற்றின் மணலில் உட்கார்ந் கொண்டிருந்தார். எங்கிருந்த மாந்தோப்பிலிருந்தோ, இந்த பையன்கள் மாங்காய்களை அடித்துக் கொண்டு, வழி நெடுக சண்டை போட்டுக் கொண்டு வந்தார்கள். இவர்களுக்கு சண்டையின் காரணம் என்னவென்று ஏன் விசாரிக்க வேண்டும் சண்டையில்லாத சமயம்தானே அபூர்வம்.

இருந்தாலும் கிழவரின் ஆவல் ரொம்ப ஜாஸ்தி. தாம் இருந் இடத்திலிருந்து அவர்களைக் கை தட்டிக் கூப்பிட்டார் கிழவ சீதாவுக்கும் ராதாவுக்கும் இந்தக் கிழவரிடத்தில் கொஞ்சம் பிரியம் ''வாருங்கள், கொஞ்சநேரம், ஒருவருக்கொருவர் சண்டை போட்டு கொள்ளாமல், நான் சொல்லுவதைக் கேட்பீர்களா?'' என்றா கிழவர்.

''தாத்தா! சண்டையில்லாமற் போனால், நாங்களிருவரு பிரிந்து போய்ச் செத்துவிடுவோம்!'' என்று சொல்லிவைத்த போல, ஒரே காலத்தில் இருவரும் சொன்னார்கள்.

இரட்டையர்களின் சொல் வேகத்தைக் கண்டு, கிழவ திகைத்துப் போனார். இது என்ன கூத்து என்று மனதில் நினைத்து கொண்டார். ''நீங்கள் சொல்லுவது, எனக்கு விளங்கவில்லையே! என்றார் கிழவர். ''விளங்காது, விளங்காது!'' என்று இருவரு கூப்பாடு போட்டார்கள்.

கிழவரின் எழுபது வயது அனுபவப் பிடிவாதம் சும்மா யிருக் முடியுமா? ''ஒற்றுமையினாலே பிரியம் என்று கேள்விப்பட்டிரு கிறேன். சண்டையாலே பிரியம் என்று நான் கேள்விப்பட்டதே யில்லை!'' என்றார் கிழவர்.

''பகவான் சிருஷ்டி சக்திக்கு ஏன் எல்லை கோலுகிறீர்கள் நீங்கள் ஆண்டவனை நம்புகிறதில்லை போலிருக்கிறது!'' என்றா ஒருவன்.

''ஆண்டவனை நம்பினால் ஆபத்து வந்து விடாதா?'' என்று இன்னொருவன் சொன்னான். இருவரும் கலகலவென்று சிரித்தார்கள். கிழவர் கூடச் சிரிக்காமல் என்ன செய்ய முடியும்?

## பருவப் பேச்சு

பையன்களுக்கு வயது பதினாறு இருக்கும். பதினாறு வயதிலே, இவர்கள் கடவுளைப் பற்றி இவ்வாறு பேசுவதில் கிழவருக்கு ஆச்சரியம். கடவுளைத் தவிர, வேறு எல்லா சங்கதிகளையும் பற்றிச் சலிக்காமல் பேசுகிற பருவம் என்பது அவரது எண்ணம். தம்முடைய பழைய அனுபவத்தின் மூலம் வந்த முடிவு.

காலம் மாறிக் கொண்டு வருவது அவர் கண்ணில் படவில்லை. சண்டையினால் ஒற்றுமை நிலைத்திருப்பதைப் போல, வேறு எது மூலமாயும் அவ்வளவாக நிலைத்திருக்காது என்ற உண்மையைக் கிழவரால் கற்பனை செய்து அனுபவிக்க முடியவில்லை.

மனதுக்குள்ளாகவே, இவர்களை ஆசீர்வாதம் செய்தார். வெளியே, வாய்விட்டு ஆசீர்வாதம் செய்வதில் அவருக்குக் பயம். இரண்டு பேரும் சேர்ந்து பிடித்துக் கொண்டால், அவரால் என்ன செய்ய முடியும்? அவர் செய்ய எண்ணிய வேலையை மறக்கவில்லை; ஆனால் முடியாது என்று விட்டுவிட்டார்.

ராதாவும் சீதாவும் படிப்பதை நிறுத்தவில்லை. அவர்களுடைய தினசரிச் சண்டையையும் நிறுத்தி விடவில்லை. அவர்கள் சென்னையில் படிக்கும் பொழுதும், ஒரே இடத்தில் ஜாகை. அவர்கள் வாக்குவாதம் செய்கையில், அதைப் பார்த்துப் பக்கத்திலிருப்பவர்கள் பயந்து போவார்கள். இரவிலே சண்டை போட்டுக் கொண்டிருந்த இவர்கள், பகலிலே சேர்ந்து போவதைக் கண்டால், அவர்களுக்கு வியப்பு.

## ரயில் விபத்து

ஒரு சமயம், இவர்கள் இருவரும் விடுமுறைக்காக, ஊருக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். ரயிலில் போய்க்கொண்டிருக்கையில், ஒரு குடும்பத்தார் அவர்களுடன் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். ஒரு ஸ்டேஷனுக்கு அருகாமையில், கைகாட்டியின் பக்கத்தில் ரயில் போய்க் கொண்டிருந்தது. வேகம் அவ்வளவு ஜாஸ்தி இல்லை. பிரஸ்தாப குடும்பத்தைச் சேர்ந்த ஒரு குழந்தை, பராக்குப் பார்த்துக் கொண்டிருந்தபடி, திடீரென்று ரயிலுக்கு வெளியே விழுந்து விட்டது.

பெற்றோர்கள் தவிக்கிறார்கள்; திகைக்கிறார்கள். ஆனால் ராதாவும் சீதாவும் என்ன செய்தார்கள்? எப்படி அவர்கள் வண்டியை விட்டுக் கீழே குதித்தார்களோ, அது வண்டியிலிருந்தவர்களுக்குத் தெரியவில்லை. இதற்குள் ரயில் வண்டியும் நின்று விட்டது. விழுந்த குழந்தையைக் கையில் இரண்டு பேரும் எடுத்துக் கொண்டு, ரயிலை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். குழந்தைக்கு மூர்ச்சை காயம் ஒன்றும்படவில்லை.

வண்டியிலிருந்தவர்கள் சீதாவையும் ராதாவையும் வாழ்த்தி னார்கள். ஆனால் அவர்களிருவரும் ஒருவரைப் பார்த்துக் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தார்கள். மற்றவர்கள் சொல்லுவதை அவர்கள் கவனிக்கவேயில்லை.

''குழந்தைக்குக் காயமொன்றுமில்லை; நல்ல வேளையாக ஆண்டவன் கிருபையால், பிழைத்துக் கொண்டாள். நீங்கள் ஏன் இன்னும் அழுது கொண்டிருக்கிறீர்கள்? அழாதேயுங்கள்!'' என்றார் குழந்தையின் தகப்பனார்.

## இவனுக்குப் பாத்தியமேது?

''என்னை விட்டு விட்டு இவன் சாக நினைத்தானே! என்ன பாதகம்!'' என்று ஒருவன் மற்றவனைப் பார்த்து, நிமிஷங்கூடத் தயங்காமல் சொன்னான்.

''உங்கள் இரண்டு பேருக்கும் குழந்தையின் கவலை இல்லை போலிருக்கிறது. உங்கள் பரஸ்பரக் கவலைதானோ!'' என்று ஒருவர் குத்தலாகக் கேட்டார்.

''குழந்தையைக் காப்பாற்றுவதற்குத் தனியாக இவனுக்குப் பாத்தியதை ஏது? என்னை விட்டுவிட்டு அவன் என்னமாய்க் குதிக்கலாம்?'' என்றான் சீதாராமன்.

''இதைத்தானே நானும் அவனைக் கேட்கிறேன்!'' என்று ராதாகிருஷ்ணன் அழுத்தம் திருத்தமாய்ச் சொன்னான்.

''நீங்கள் இரண்டு பேரும் ஏக காலத்தில் குதித்ததாக எங்கள் நினைவு!'' என்றார் ஒருவர்.

''அவன் முதலில், அவன் முதலில்!'' என்று இருவரும் சத்தம் போட்டார்கள்.

''இரண்டு பேரும் முதலிலேதான் குதித்தீர்கள்!'' என்று இன்னொருவர் வேடிக்கையாகச் சொன்னார். இரட்டையர்களைத் தவிர, மற்றெல்லாரும் விலா விரியச் சிரித்தார்கள்.

இந்த சமாசாரம் எப்படியோ ஊர்க் கிழவருக்கு எட்டிப்போய் விட்டது. கேட்டதும், அவர் அளவில்லாமல் ஆனந்தக் கண்ணீர் பெருக்கினார். அவர்களைச் சந்தித்ததும், தம்முடைய தோல் சுருங் கிய கைகளை நீட்டி, அவர்கள் இருவரையும் சேர்த்து அணைத்துத் தழுவிக் கொண்டு, ''ஈசுவரன் லீலை இது. இந்த லீலைக்குக் கருவி களான உங்களைக் கண்டும், என் ஜன்மம் ஈடேற வில்லை என்று சொன்னால், அது பொய்யாகும். நீங்கள் இருவரும் தீர்க்க ஆயு ளோடு இருக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன்!'' என்றார்.

\- 1934